# பகவத் பாதை

Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

20-01-2014


## அனுபவத்தை அனுபவிக்காதே

**- ஸ்ரீ பகவத்**



அனுபவங்கள் அனைத்தும், அவையாக வரவேண்டும், அவையாக அனுபவமாக வேண்டும், அவையாக மறைய வேண்டும்.

- ஸ்ரீ பகவத்



மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் தலைப்பில் ஏற்கெனவே ஒரு கட்டுரையை எழுதி வெளியிட்டிருந்தோம். அந்தக் கட்டுரையில், மனம் மற்றும் புத்தி ஆகியவற்றை மட்டும் சிறப்பாகப் பார்த்திருந்தோம். அகங்காரம் என்பது பற்றி ஓர் 'இருப்புணர்வு' என்றும் 'அனுபவ உணர்வு' என்றும் மட்டும் பொதுவாகப் பார்த்திருந்தோம்.

இங்கு நாம் அகங்காரம் என்பது பற்றி இன்னும் சற்று விரிவாகப் பார்ப்போம்.

அகங்காரம் என்பது பொதுவாக, ஒருவர் தன்னைப் பற்றி வைத்திருக்கும் ஆணவமான கருத்து என்றே கருதி வருகிறோம். அகங்காரம் என்பது நம்முடைய அடிப்படையான உணர்வு நிலை. இதை நாம் நம் மனதின் உணர்வு அம்சம் அல்லது consciousness என்று கூறலாம்.

இந்த உணர்வுதான் நமது அனுபவமாக மாறுகிறது. நமது அனுபவ உணர்வாக வெளிப்படுகிறது. நமக்கு எத்தனையோ விதமான உணர்ச்சிகள் ஏற்படுகின்றன.

மகிழ்ச்சி, பயம், துக்கம், கோபம்

- இப்படி எத்தனையோ விதமான உணர்ச்சிகளை நாம் அனுபவிக்கின்றோம். இவை அனைத்தும் இந்த அகங்கார உணர்வின் வெளிப்பாடே.

உணர்வுப்பூர்வமான நமது அனுபவங்கள் அனைத்தும் இந்த அகங்கார உணர்வின் வெளிப்பாடே.

இந்த அகங்காரம் என்பது ஓர் உணர்வு மையம்.

'நான் இருக்கிறேன்' என்று அது உணர்வுப்பூர்வமாகத் தன்னை எப்போதும் காட்டிக் கொள்கிறது.

உணர்வு என்பது எப்போதும் தனித்து இயங்காது. அது எப்போதும், தன்னை ஏதாவது ஒன்றோடு இணைத்துக்கொண்டே,

தனது இருப்புநிலையை ஓர் அனுபவமாகக் காட்டுகின்றது.

நமது நினைவுகளோடு அகங்காரம், தன்னை இணைத்துக்கொண்டு தன்னை மனதாகக் காட்டிக் கொள்கிறது.

நமது அனுபவங்களோடு இணைத்துக்கொண்டு தன்னை ஓர் அனுபவமாகக் காட்டுகின்றது.

நமது நாக்கைப் பற்றி நமக்குத் தெரியும். நாக்கு என்பது, உணர்வில்லாத ஒன்று அன்று. அந்த நாக்கு அதனளவில் எந்த உணர்வும் இல்லாமல் தான் அமைந்துள்ளது. ஏதாவது ஒரு சுவையை நாம் சுவைக்கும்போது, நம் நாக்கு, அந்தச் சுவை உணர்வாக மாறிக்கொள்கிறது.

இனிப்பைச் சாப்பிடும் போது, இனிப்புணர்வாக மாறிக்கொள்கிறது. கசப்பைச் சாப்பிடும் போது, கசப்புணர்வாக மாறிக்கொள்கிறது. நாம் எந்தச் சுவையையும் சுவைக்காத போது, நமது நாக்கு, எந்தச் சுவையையும் காட்டாமல், சுவையற்ற தன்மையில்,

தான், இருப்பது தெரியாமல், இருந்துவிடுகிறது. இதனைப்போல், அகங்காரம் என்னும் நமது இருப்புணர்வும், நமது அனுபவத்தை வெளிப்படுத்தும் ஆதார உணர்வாக அமைந்திருக்கிறது.

அகங்காரம் இல்லாத அனுபவம் என்று எதுவும் கிடையாது. அதுபோல் அனுபவம் இல்லாத அகங்காரம் என்றும் எதுவும் கிடையாது. இரண்டும் இணைந்த நிலையிலேயே, ஒன்றையொன்று விளக்கப்படுத்திக் கொள்கிறது.

நமக்கு ஏற்படும் ஒவ்வொரு அனுபவத்தின்போதும், அந்த ஒவ்வொரு அனுபவமும்,

அனுபவம் மற்றும் அனுபவிப்பவன் ஆகிய இரண்டு அம்சங்களும் சேர்ந்த கலவையாகவே அமைந்துள்ளது.

நமது அனுபவத்தை, அனுபவம் என்றும் கூறிக் கொள்ளலாம்; அனுபவிப்பவன் என்றும் கூறிக் கொள்ளலாம்.

அங்கு அனுபவந்தான் அகங்காரமாக இருக்கிறது; அகங்காரந்தான் அனுபவமாக இருக்கிறது.

நமது அனுபவங்கள் யாவும் ஒரு வெடிப்பே.

ஒரு வாணம், வெடித்துச் சிதறி மறைந்து விடுவதைப் போல், நமது அனுபவங்கள் அனைத்தும் வெடித்துச் சிதறி, ஓர் அனுபவ உணர்வை வெளிப்படுத்திவிட்டு மறைந்துவிடுகின்றது.

அனுபவம் என்பதும், அகங்காரம் என்பதும் ஒரு கணநேர உணர்வின் வெளிப்பாடே. வெளிப்பட்டு, வெளிப்பட்டு அது மறைந்து விடுகின்றது.

ஆன்மிக உலகில், 'நான்' என்னும் உணர்வு இல்லாமல் இருக்கவேண்டும் என்ற கருத்து, மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும்.

நான் என்னும் இயக்கந்தான் உண்மையை மறைத்துக் கொண்டிருக்கிறது. நான் என்பது விலகிவிட்டால், உண்மையின் இயக்கம் செயலுக்கு வந்துவிடும்

– இப்படிக் கூறப்படுகிறது.

ஆனால், நான் என்று தனித்து எதுவுமே கிடையாது. நான் என்பது ஏதாவது ஓர் அனுபவத்துடன் சேர்ந்து, அனுபவமாக மட்டுமே உள்ளது.

அனுபவம் மறையும்போது அனுபவத்தோடு சேர்ந்த 'நான்' எனும் உணர்வும் மறைந்து விடுகிறது.

நமக்கு ஏற்படும் அனுபவங்கள் பலதரப்பட்டவை. நமக்கு ஏற்படும் சில உணர்ச்சிகளை நாம் விரும்புகின்றோம்; சில உணர்ச்சிகளை நாம் விரும்புவதில்லை. மகிழ்ச்சி என்னும் உணர்ச்சியை நாம் விரும்புகின்றோம். பயம், துக்கம் போன்ற உணர்ச்சிகளை நாம் விரும்புவதில்லை.

மகிழ்ச்சி நீடித்திருப்பதை விரும்புகின்றோம். துக்கம் நம்மை விட்டுப் போய்விடவேண்டும் என எண்ணுகின்றோம்.

நமக்கு ஏற்படும் எந்த அனுபவத்திலும், அனுபவம் – அனுபவிப்பவன் என்ற பிரிவு கிடையாது.

மகிழ்ச்சியான அனுபவத்தை நாம் விரும்பும்போதும்,

துக்கமான அனுபவத்தை நாம் வெறுக்கும் போதும்,

அந்த அனுபவத்தை நிர்வாகம் செய்யும், ஓர் அமைப்பு உருவாகி விடுகின்றது.

உண்மையில், நமது அனுபவங்கள் – நமது உணர்ச்சிகள் அனைத்தும், தாமாகத் தோன்றி, தாமாக மறைந்து விடுகின்றன.

அவற்றில் நாம் செய்வதற்கு எதுவுமே கிடையாது. நாம் செய்வதற்கு எதுவோ உள்ளது என நாம் தவறாகப் பொறுப்பை எடுத்துக் கொள்ளும்போதுதான்,

அனுபவம் – அனுபவிப்பவன் என்ற இருமை ஏற்பட்டுவிடுகிறது.

நம்மை நாம் அனுபவிப்பவனாகக் கற்பிதம் செய்து கொள்கிறோம். அனுபவத்தை நிர்வகிக்கும் பொறுப்பை எடுத்துக்கொள்கிறோம்.

நாம் ஏதோ ஓர் அனுபவத்தை அனுபவிப்பதாக எண்ணிக் கொள்கிறோம். இதனால் நம்மை அனுபவிப்பவனாக எடுத்துக்கொள்கிறோம்.

அனுபவங்களை அனுபவிப்பது என்பது நமது சுயமுயற்சி; ஒரு conscious effort. அனுபவங்கள் வரவேண்டியவை தாம். ஆனால் அவை தாமாக வரவேண்டும்.

அனுபவத்தை அப்புறப்படுத்த நினைப்பதும், நமது அனுபவத்தையே உறுதிப்படுத்துகின்றது.

மோசமான அனுபவம் நம்மைவிட்டுப் போய்விடவேண்டும் என நாம் நினைக்கும்போதே, அது –

நாம் அனுபவத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம்

– என்பதைக் கூறாமல் கூறிவிடுகின்றது.

அனுபவங்கள் யாவும், தாமாக ஏற்படவேண்டும்; தாமாக மறையவேண்டும்.

அனுபவம் என்பது அனுபவிக்கப்படவேண்டிய ஒன்று அல்ல. அது வெடித்துச் சிதறி மறைந்துவிட வேண்டும். அனுபவத்தைத் தேடுவதும், அனுபவத்தைப் புறக்கணிப்பதும்,

அனுபவத்தை அனுபவிப்பதே ஆகும்; அனுபவத்துக்கு முக்கியத்துவம் கொடுப்பதே ஆகும்.

அனுபவம் என்பது நமது மன உணர்ச்சிகளையே குறிக்கின்றது. (நமது நினைவுகளும் ஒருவிதமான மனோ அனுபவமே).

அனுபவங்கள் யாவும் நம்மையறியாமல் ஏற்படுகின்றன. அவை நம்மையறியாமல் ஏற்பட்டாலும், அனுபவங்களை நாம் உணர்ந்து அறிகிறோம். நாம் அறியும்போதே அவை மறைந்து விடுகின்றன. அவை ஏற்படுவதும், அறியப்படுவதும், மறைவதும் தாமாக ஏற்படுகின்றன. நம்மையறியாமல் ஏற்படுகின்றன.

நம்முடைய முயற்சி – conscious ஆன முயற்சி எதுவும் அங்கு கிடையாது.

ஏதோ ஓர் அனுபவத்தை – அதுவேண்டும் என்றோ அல்லது வேண்டாமென்றோ, conscious ஆக – நாமாக விரும்பி நிர்வாகம் செய்யும்போது தான்

– அனுபவத்தை, நாமாக அனுபவிக்கிறோம்.

தாமாக அனுபவமாகும் அனுபவங்கள் யாவும், தாமாக வந்து, தாமாக மறைந்து விடுகின்றன.

அனுபவத்தை நாமாக விரும்பி நிர்வாகம் செய்யும்போது,

சில அனுபவங்கள் நீடித்திருக்கவேண்டும் என விரும்புகின்றோம்; சில அனுபவங்கள் நம்மைவிட்டு உடனடியாக நீங்கிவிட வேண்டும் என்று விரும்புகின்றோம்.

இதனால்,

நம் மனதே இரு பிரிவாக மாறியமைந்து விடுகிறது.

ஒரு பகுதி அனுபவிப்பவனாகிய 'நான்' ஆகவும் மாறிவிடுகிறது.

ஓர் உதாரணம்

காலையில் நாம் நமது வீட்டுக் கூடத்தில் – ஹாலில் அமர்ந்து இருக்கின்றோம். காலைப் பத்திரிக்கையைப் படித்துக் கொண்டிருக்கின்றோம்.

நமது மனைவி / கணவன் அந்தக் கூடத்துக்கு வந்து, தொலைபேசியில் யாரிடமோ பேசிவிட்டுத் தனது அறைக்குத் திரும்புகின்றார்.

இதுபோல் நமது குழந்தைகள் அந்தக் கூடத்துக்கு வந்து, தங்களுக்கு வேண்டிய புத்தகங்களை எவற்றையோ எடுத்துக் கொண்டு, தங்களின் அறைக்குத் திரும்பி விடுகிறார்கள்.

அவர்கள் வந்ததும், செயல்பட்டதும் நமக்குத் தெரிகிறது.

ஆனால் நாம் அவற்றில் அக்கறை காட்டாமல், நாம் நமது செய்தித்தாளையே பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

வந்தவர்களை நிர்வாகம் செய்யவேண்டிய பொறுப்பு எதனையும் நாம் எடுத்துக் கொள்ளவில்லை.

இந்த உதாரணத்தில் ஒரு சிறிய மாற்றம் செய்வதாக வைத்துக்கொள்வோம்.

அப்படி நமது கூடத்தினுள் நுழைந்தவர், நமது வீட்டின் உறுப்பினராக அல்லாமல் யாரோ ஒரு அந்நியர் என வைத்துக்கொள்வோம்.

தெருவில் போகும் யாரோ ஒருவர் நமது அனுமதி பெறாமல் நமது கூடத்தினுள் நுழைந்துவிட்டால், நாம் பதறிப்போய் விடுவோம்.

"யார் நீங்கள்? நீங்கள் எப்படி எங்களைக் கேட்காமல் உள்ளே வரலாம்", என்று கேட்டு அவர்களை வெளியேற்றும் நடவடிக்கையில் இறங்கிவிடுவோம்.

அவரை அப்புறப்படுத்துவதற்காக, அப்புறப்படுத்தும் பொறுப்பை எடுத்துக்கொள்கிறோம்.

இப்படி, நமக்கு ஏற்படும், பயம், வருத்தம் போன்ற சில உணர்வுகள் நமக்குப் பிடிப்பதில்லை. அவை நம்மை விட்டுப் போய்விடவேண்டும் என விரும்புகின்றோம். நமது உணர்வுகளை நிர்வாகம் செய்யும் பொறுப்பை எடுத்துக்கொள்கிறோம்.

இப்படிப் பொறுப்பை எடுத்துக்கொள்வதன் மூலம், நமது தனித்தன்மை வலிமை பெறுகிறது.

இந்த உதாரணத்தில், இன்னுமொரு மாறுதல்.

அப்படிக் கூடத்தினுள் நுழைந்தவர் யாரோ ஒருவர் அல்லாமல்,

நமது நெருங்கிய உறவினர் என வைத்துக்கொள்வோம்.

அவர் பாட்டுக்கு உள்ளே வந்து, அவர் போக்கில் செயல்படட்டும் என நாம் கண்டுங்காணாமல் இருந்துவிடமுடியுமா?

அவரை வரவேற்று உபசரிப்பதில் ஈடுபட்டு விடுவோம்.

இவ்வாறு, மகிழ்ச்சி போன்ற உணர்வுகள் நமக்கு ஏற்படும்போது, அவற்றை நம்மோடு நிரந்தரமாக வைத்துக்கொள்வதில் அக்கறை காட்டுகிறோம்.

இதன்மூலமும், நாம் நமது உணர்வுகளை நிர்வகிக்கும் பொறுப்பை எடுத்துக்கொள்கிறோம்.

எப்போதெல்லாம் நாம் பொறுப்பை எடுத்துக்கொள்கிறோமோ,

அப்போதெல்லாம், 'நான்' என்னும் தனித்தன்மை வலுப்பெற ஆரம்பிக்கின்றது.

நமது உணர்ச்சிகள் எனும் அனுபவங்கள் யாவும், தாமாக வந்து, தாமாக அனுபவிக்கப்பட்டு, தாமாக மறைந்துவிடுகின்றன. இவை அனைத்தும் நம்மையறியாமல் தாமாக நடைபெறுகின்றன.

அவற்றை நாம் நிர்வாகம் செய்ய முயலும் போதுதான் – அவற்றை deal செய்ய முயலும் போது தான்

அனுபவங்களை நாமாக - conscious ஆக அனுபவிக்கிறோம்.

அனுபவங்களை அனுபவிப்பது தான் 'நான்' எனும் உணர்வுக்குக் காரணமாகின்றது; போராட்டங்கள் அனைத்துக்கும் காரணமாகிறது.

அனுபவங்களை அனுபவிக்கும்போது தான், நாம் பொறுப்பை எடுத்துக் கொள்கிறோம்.

நம்முடைய புற வாழ்க்கையில் நாம் எத்தனையோ செயல்களில் ஈடுபட்டு வருகிறோம். புற உலகில் நமக்கு எத்தனையோ கடமைகள் இருக்கின்றன.

நம்முடைய கடமைகள் நமக்கு பொறுப்பை ஏற்படுத்துவதில்லையா?

உணர்ச்சிகளை நிர்வாகம் செய்ய முயல்வது மட்டுந்தான் பொறுப்பை ஏற்படுத்துகின்றதா?

பிரச்சினை எங்கு இருந்தாலும் சரி –

– அது அகத்தில் இருந்தாலும் சரி, புறத்தில் இருந்தாலும் சரி –

நாம் பொறுப்பை எடுத்துத்தான் ஆகவேண்டும்.

பொறுப்பென்று இருக்கும்போது, 'நான்' எனும் தன்னிறுக்க நிலையும், self assertion னும், பலம் பெற்றிடவே செய்யும்.

ஆனால்,

பிரச்சினை உள்ளே இருக்கிறதா? அல்லது வெளியே இருக்கிறதா? அல்லது இரண்டு இடத்திலுமே இருக்கிறதா?

நம்மை ஒருவர் அவமானப்படுத்தி விடுகிறார் - திட்டிவிடுகிறார், நம் மனதில் வேதனை, வலி ஏற்படுகிறது.

அவர் நம்மை அவமானப்படுத்தியதால் நம் மனதில் வலியோ வேதனையோ ஏற்படவில்லை என்றால், அவர் திட்டியது பிரச்சினையே அல்ல.

நமது செயல்கள் தோல்வியடையும்போது நம் மனதில் வருத்தமும், பதட்டமும் ஏற்படுகின்றது.

செயல்களைச் சீரமைக்க நாம் முயல்வது என்பது,

உண்மையில் நாம் மனவருத்தத்தையும், பதட்டத்தையும், சீரமைக்க முயல்வதேயாகும்.

நமது மன உணர்ச்சிகள் எப்படி வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும் என்ற நிலையில்,

நாம் நமது புற நிகழ்வுகளைச் சீரமைக்க முயல்வோமாயின்,

அது பிரச்சினைகளைத் தீர்க்கும் முயற்சி அல்ல.

மன உணர்ச்சிகளைச் சீரமைக்கும் நோக்கத்தில் புற நிகழ்வுகளைச் சீரமைப்பது தான் பிரச்சினைகளைத் தீர்க்க முயல்வதாகும்.

மன உணர்ச்சிகளை நிர்வகிக்கும் பொறுப்பை எடுத்துக்கொள்வதுதான்,

பொறுப்பை எடுத்துக்கொள்வதாகும்.

மன உணர்ச்சிகளை நிர்வகிக்கும் பொறுப்பை எடுத்துக்கொள்ளாமல்,

புற நிகழ்வுகளை நிர்வகிக்கும் பொறுப்பை எடுத்துக்கொள்வது,

பொறுப்பை வைத்துக் கொள்வதாகாது.

அக உணர்ச்சிகளைச் சீரமைக்க விளைவதுதான்,

'நான்' எனும் தன்னிறுக்கத்தை ஏற்படுத்துகிறது.

'நான்' எனும் தன்னிறுக்கம், நம்மை விட்டுப் போய்விடவேண்டுமென விரும்புவதும்,

அந்தத் தன்னிறுக்கத்தையே வலுப்படுத்துகிறது.

நான் என்னும் தன்னிறுக்கமும், ஓர் அக உணர்ச்சியே.

அனுபவங்கள் அனைத்தும், அவையாக வரவேண்டும், அவையாக அனுபவமாக வேண்டும், அவையாக மறைய வேண்டும்.

அங்கு நம்முடைய மனம் விரும்பிய - conscious ஆன, அனுபவம் எதுவும் இருக்கக்கூடாது.

அனுபவித்தலே அனுபவிப்பவனைக் கொண்டு வருகிறது.

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனக் கூறுகிறோம்.

இவை ஒரே நேரத்தில் மொத்தமாகச் செயல்படுகிறதா? அல்லது ஒன்றன்பின் ஒன்றாகச் செயல்படுகிறதா? எவையெல்லாம் கூட்டாகச் செயல்படுகின்றன? எவையெல்லாம் தனியாகச் செயல்படுகின்றன?

சித்தம் என்பது நமது இயல்பு. அகங்காரம் என்பது உணர்வு நிலை; நமது consciousness. நமக்கு ஏற்படும் அனுபவங்கள் அனைத்தும் அகங்காரத்தின் அனுபவமே.

சித்தம் என்பது தன்னைத் தனித்து வெளிக்காட்டுவதில்லை. அதுபோல் அகங்காரமும் தன்னைத் தனித்து வெளிக்காட்டுவதில்லை.

சித்தமும் அகங்காரமும் கலந்த கலவையாகவே நமது அனுபவங்களெல்லாம் வெளிப்படுகின்றன.

ஒரே நேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்டவை இருக்கமுடியாது.

அனுபவம் இருக்கும்போது, மனமோ, புத்தியோ இருக்காது. மனம் இருக்கும்போது, புத்தி மற்றும் அகங்காரம் இருக்காது. புத்தி இருக்கும்போது, மனம் மற்றும் அகங்காரம் எனும் அனுபவம் இருக்காது.

ஏதாவது ஒன்று தான் வெளிப்படும்.

ஆனால் அவை, மைக்ரோ விநாடியில் வந்து வந்து, மாறிக்கொள்வதால்,

ஒரே நேரத்தில் மனம், புத்தி, அகங்காரம் எனும் அனுபவம் ஆகியவை சேர்ந்து செயல்படுவதான தோற்றம் மட்டும் ஏற்படுகிறது.

உண்மையில் ஒரு மைக்ரோ நொடியில் ஒன்று மட்டுமே செயல்படுகின்றது.

சித்தம் என்பது நமது மனதின் - அந்தக் கரணத்தின் அடிப்படை இயல்பு. அகங்காரம் என்பது நமது அடிப்படை உணர்வு நிலை - consciousness இவை இரண்டுமே இருப்பது தெரியாமல் இருந்து கொண்டிருக்கின்றன.

சித்தமும், அகங்காரமும் சேர்ந்த கலப்பாக வெளிப்படும் அனுபவ உணர்வை மட்டுமே நாம் வெளிப்படையாக அறிய முடியும்.

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என, நம்முடைய அகக்கரணம் நான்கு பகுதியாக பிரிக்கப்பட்டாலும்,

மனம், புத்தி, அனுபவம் எனும் மூன்று பகுதியாகவே அது இயங்குகிறது. அதிலும், அவற்றுள் ஏதாவது ஒன்று மட்டுமே ஒரு மைக்ரோ நொடியில் இயங்குகிறது.

அனுபவங்கள் அனைத்தும், தாமாக வந்து, தாமாக மறைந்துவிடுபவை.

மனம், புத்தி ஆகியவைதான், அந்த அனுபவத்தை அனுபவிக்க முயல்கின்றன - நிர்வாகம் செய்ய முயல்கின்றன அனுபவம் (சித்தம் + அகங்காரம்), என்பது,

மனம், புத்தி ஆகியவற்றுக்குக் கட்டுப்பட்டதன்று.

அனுபவங்களை, "தனது அனுபவம்" என்று நமது மனமோ அல்லது புத்தியோ கூறி,

அனுபவங்களை நிர்வாகம் செய்ய முயல்கின்றன. எந்த அனுபவமும், புத்திக்கோ, மனதுக்கோ சொந்தமானது அல்ல.

புத்தியும், மனமும் புறச்செயல்களை நிர்வாகம் செய்ய அமைக்கப்பட்டவை. நமது மன அனுபவங்களைச் சீரமைக்க வேண்டிய உரிமையோ, கடமையோ அவற்றுக்குக் கிடையாது.

ஏன்,

அனுபவங்களை அனுபவிக்கும் உரிமைகூட நம்முடைய மனதுக்கும், புத்திக்கும் கிடையாது.

"எனது அனுபவம்" என்று சொல்லும் உரிமை,

நமது புத்திக்கும் கிடையாது; மனதுக்கும் கிடையாது.

அன்பர் ஒருவர் தனது அனுபவத்தைக் கூறினார்.

"எனக்கு சின்னஞ்சிறு குழந்தை ஒன்று உள்ளது. அதனுடன் விளையாடி மகிழ்வது எனது பொழுதுபோக்கு. உங்கள் கருத்தைப் புரிந்து கொண்டபிறகும் எனது குழந்தையுடன் விளையாடத்தான் செய்கிறேன். ஆனால் முன்புபோல் என்னை மறந்த ஈடுபாடு ஏற்படவில்லை".

இன்னுமொரு அன்பரின் அனுபவம் :

"எனது குழந்தைக்கு உடல்நலம் பாதிக்கப்பட்டால் நான் மிகவும் பதறிப்போவேன். எதையும் செய்யமுடியாமல் தடுமாறிவிடுவேன். இப்போது உங்கள் கருத்தைப் புரிந்து கொண்ட பின்பு, எனக்கு முன்புபோல் பதட்டமோ, தடுமாற்றமோ இல்லை. குழந்தை பாதிக்கப்பட்டால், எனக்கும் பாதிப்பு ஏற்படுகிறது. ஆனால் அது என்னை முடக்கிப் போடும் பாதிப்பாக இல்லை".

இவர்களுக்கு என்ன நேர்ந்திருக்கிறது? அவர்கள் என்ன புரிந்து கொண்டார்கள்?

அனுபவம் ஏற்படுகிறது. ஆனால் அவர்களாக அந்த அனுபவத்தை எடுத்துக் கொள்ளவில்லை. அவர்களாக அந்த அனுபவத்தை அனுபவிக்கவில்லை.

தாமாக ஏற்படும் அனுபவம், தாமாக மறைந்துவிடுகிறது.

இந்நிலைதான், சாஸ்திரங்களில் நிஷ்காமிய கர்மா, பற்றற்ற செயல், பலனில் பற்றில்லாமல் செயல்படுதல், வினைப்பதிவை ஏற்படுத்தாத செயல் என்றெல்லாம் விவரிக்கப்படுகிறது.

இந்நிலையில் அனுபவம் இருக்கிறது; அனுபவிக்கப்படுகிறது. ஆனால் நாமாக - wilfull ஆக அனுபவிப்பதில்லை. அனுபவங்கள் அனைத்தும், தாமாக அனுபவம் ஆகின்றன. அனுபவம் ஆவதால் தான் அனுபவம் வந்ததே நமக்குத் தெரிகிறது. ஆனால் நாமாக ஈடுபட்டு அனுபவிப்பதில்லை.

இதனால்தான், இது,

"அனுபவம் இருக்கிறது; ஆனால் அனுபவிப்பவன் இல்லை. செயல் இருக்கிறது; ஆனால் செய்பவன் இல்லை" எனக் கூறப்படுகிறது.

அதை ஒரு விநோதமான நிலையாகக் கற்பனை செய்து கொள்ளத் தேவையில்லை.

மனோ அனுபவங்கள் அனைத்தும் தாமாக இயங்க அனுமதிப்பதையே இது குறிக்கிறது.

எந்த அனுபவத்தையும் மாற்றியமைக்க முயற்சி செய்யாமலிருப்பதையே இது குறிக்கிறது.

எந்த அனுபவத்தையும் நாமாக அனுபவிக்காமலிருப்பதையே இது குறிக்கிறது. ★

## ?கேள்வி பதில்

கேள்வி : பகவத் ஐயாவின் மனதைப் பற்றிய புரிதலுக்குப் பிறகு எனக்கு புற வாழ்க்கையில் இருந்து வந்த பற்று குறைவதாக தோன்றுகிறது. எனக்கு பணம் சேர்ப்பது, சொத்துக்கள் சேர்ப்பது, வாழ்வின் வசதிகளுக்கு தேவையான பொருட்களை சேர்ப்பது போன்றவற்றில் முன்பு இருந்து வந்த தீவிரம் இப்போது இல்லை. ஆனால் என்னுடைய தொழிலையும், வேலைகளையும், குடும்ப கடமைகளையும் முன்பை விட இப்போது சிறப்பாக செய்து வருகிறேன். எதனால் புறவாழ்க்கையில் பற்றுக் குறைவதாகத் தோன்றுகிறது? இந்த நிலையை நான் மாற்றி அமைக்க என்ன செய்யவேண்டும்?

பதில் : நீங்கள் கேட்டிருக்கும் கேள்வி புறவாழ்க்கை சம்பந்தப்பட்டது போல் தோன்றினாலும், உண்மையில் அகம் சம்பந்தப்பட்டது. நமது மனதின் இயக்கத்திற்கு எதிராக நம்மால் எதுவுமே செய்யமுடியாது; அது நமது கட்டுப்பாட்டில் இல்லாமல் தாமாக நடைபெறுகிற சுதந்திர இயக்கம் என்பதைப் புரிந்து கொண்ட நிலையின் வெளிப்பாடே, இப்படி புறவாழ்க்கையிலும் எண்ணத் தோன்றுகிறது. இதனால் தான் புறவாழ்வில் ஆர்வம் குறைவதாகக் கூறுகிறீர்கள்.

இந்தப் புரிதலுக்கு வரும் முன்புவரை பொருளாதார வாழ்வில் ஒரு குறிப்பிட்ட நிரந்தரத் தொகையைச் சேர்க்கவேண்டும், சொந்தமாக வீடு வாங்கவேண்டும், கார் வாங்கவேண்டும், சொத்துக்களை வாங்கிக் குவிக்கவேண்டும், நமது வாழ்க்கை வசதிகளுக்குத் தேவையான அனைத்தையும் பெருக்கிக் கொள்ளவேண்டும், ஒரு நிறைவான பொருளாதாரத்தினால் வாழ்வை முழுமையாக அனுபவித்து வாழவேண்டும் என்று ஒரு எதிர்கால திட்டத்தை வைத்திருந்தோம்.

இந்தப் புரிதலுக்குப்பிறகு மனதின் அமைதிக்கும், மன நிறைவிற்கும் நாமாக முயன்று எதுவுமே செய்ய முடியாது என்பதையும், நாம் கூறும் எந்தக் கட்டளைகளையோ, கட்டுப்பாட்டையோ நமது அக இயக்கம் ஒருபோதும் கேட்பதில்லை என்பதையும் நாம் நன்றாகப் புரிந்துக்கொள்வதினால் புறவாழ்க்கையிலும் நாமாகச் செய்வதற்கு எதுவுமில்லை என்று எண்ணத்தோன்றுகிறது. ஆனால் நீங்களே முன்பைவிட இப்போது உங்கள் வேலைகள் அனைத்தையும் சிறப்பாகச் செய்வதாகவும் முன்பு இருந்துவந்த தீவிரம் மட்டும் இப்போது இல்லை என்றும் கூறியிருக்கிறீர்கள். இதற்குக் காரணம், முன்பு மனதில் இருந்துவந்த அகப்போராட்டமும், அந்த அகப்போராட்டத்தை மாற்றியமைப்பதற்கு செலவான மனோசக்தியும் இப்போது நாம் செய்ய வேண்டிய செயலின் பக்கம் திரும்பியதுதான்.

முன்பு நாம் நமது தினசரி வேலைகளைச் செய்து முடிப்பதற்கே மனப்போராட்டத்துடன் படாத பாடுபட்டு செய்து முடிப்போம். அப்படி செய்தும் நாம் நமது வேலைகளை நிறைவாக செய்துமுடித்தோம் என்ற மனநிறைவு மட்டும் ஒருபோதும் ஏற்படாது. இன்னும் அடுத்தது அடுத்தது என்ற முடிவில்லா எதிர்காலத் திட்டத்தை மட்டும் மனம் எப்போதும் கணக்கு போட்டுக்கொண்டும், சிந்தித்துக்கொண்டும் இருக்கும். 'நமக்கு இத்தனை வயது ஆகிவிட்டது; இன்னும் நாம் கடக்கவேண்டிய தூரம் மிக அதிகமாக உள்ளது. அதை எப்படித்தான் நாம் கடக்க போகிறோம்' என்ற எதிர்கால பயத்துடன் மட்டுமே இருந்துவந்தோம். எப்படியாவது நமது Retirement வயதுக்குள் ஓரளவிற்கு பொருள் சேர்த்துவிட்டு, நமது கடமைகளைச் செய்துவிட்டு, அதன்பிறகு ஒரு அமைதியான நிறைவான வாழ்க்கையை வாழவேண்டும் என்று தான் நாம் முடிவு செய்திருந்தோம்.

ஆனால் இந்தப் புரிதலுக்குப் பிறகு அகப்போராட்டத்தை எதிர்த்து நம்மால் எதுவுமே செய்யமுடியாது என்பதைப் புரிந்துகொண்டு அதை அப்படியே விட்டுவிடுவதால் அகப்போராட்டத்திற்குச் செலவான மனோசக்தி, நாமாக சிந்தித்துச் செயல்படக்கூடிய செயலின் மீது முழுவதுமாகத் திரும்புகிறது. இதனால்தான் வேலையை முன்பைவிட இப்போது சிறப்பாகவும், விரைவாகவும் செய்து முடித்துவிட்டு நாம் நமது வேலையைச் செய்த உணர்வே இல்லாமல், நிறைய நேரம் சும்மா இருப்பது போலவே தோன்றுகிறது. நமது தினசரி வேலைகள் எல்லாம் ஒரு வேலையாகக் கூடத் தெரியாமல் செய்யும் நிலைக்கு வந்துவிடுகிறோம்.

நமது அகத்தைப் பொறுத்தவரையில் நாமாக எதையும் பற்றிப் பிடிக்காத ஒரு குழந்தைத் தன்மைக்கும், புறத்தைப் பொறுத்தவரையில் நாமாக முயன்று சிந்தித்துச் செயல்படக்கூடிய ஒரு அறிவாளியின் செயல்பாட்டுத் தன்மைக்கும் இயல்பாக மாறி விடுகிறோம். இந்த புரிந்த நிலையில் புறப்பொருட்களின் மீதான நமது பார்வையானது, வாழ்வதற்கு ஒரு வீடு தேவை, அது சொந்தமானதாகவோ அல்லது வாடகையாகவோ நமது பயன்பாட்டிற்கு நிறைவாக இருந்தால் போதும் என்று எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் நமது கவனம் முழுவதும் நமது செயலின் பக்கமே இருக்கிறது. அதற்காக வாடகை வீட்டில் இருக்கும் ஒருவர் எப்போதும் வாடகை வீட்டிலே இருந்து விடுவார் என்று கூறவில்லை. இந்தப் புரிதலினால் தன்னுடைய தகுதிகளை வளர்த்துக்கொண்டு தன் நிறை, குறைகளை ஆராய்ந்து தன்னுடைய தொழிலில் சிறப்பாகச் செயல்பட்டு பொருளாதாரத்தில் உயர்ந்து சொந்தமாக வீடு வாங்கும் நிலைக்கு உயருவார். தேவையற்ற ஆடம்பரங்களையும், கடன்களையும் உருவாக்கிக்கொண்டு திண்டாடும் நபராக இல்லாமல் தன்னுடைய பொருளாதாரத் தகுதிக்கு ஏற்ப நிறைவாக வாழக்கூடியவராக மட்டுமே இருப்பார்.

நமது தேவைகளுக்கு பயன்படுத்திக்கொள்ளத்தான் வீடு, கார் மற்றும் வசதிகள் என அனைத்துமே தவிர, அவைகள் கிடைக்கவில்லை என்ற ஏக்கமும், வருத்தமும் ஒருபோதும் இருக்காது. முன்பு மனதில் இருந்துவந்த அதிகப்படியான பற்று மட்டும் இப்போது இருக்காது. நம்மிடம் இருப்பதிலிருந்து இன்னும் என்ன என்ன சிறப்பாக நம்மால் செய்யமுடியும் என்று செயலுக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுக்கும் நிலைக்கு வருகிறோம். பொருள் சேர்ப்பதற்காக மட்டுமே வாழ்க்கை என்று இருந்த நிலைமாறி மன நிறைவான வாழ்க்கை வாழ்வதற்கே பொருள்சேர்க்கை என்ற நிலையை நாம் தெளிவாக புரிந்துகொண்டு அதற்குத் தேவையான செயல்களைச் செய்யும் நிலைக்கு நாம் உயருகிறோம். செயலுக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுக்கும் நிலைக்கு வருகிறோம். பொருள் சேர்ப்பதற்காக மட்டுமே வாழ்க்கை என்று இருந்த நிலைமாறி மன நிறைவான வாழ்க்கை வாழ்வதற்கே பொருள்சேர்க்கை என்ற நிலையை நாம் தெளிவாகப் புரிந்துகொண்டு அதற்குத் தேவையான செயல்களைச் செய்யும் நிலைக்கு நாம் உயருகிறோம்.

இதற்கு மேலும் உங்கள் மனதிற்குப் பிடித்த வேலைகள் எவை, மனதிற்கு நிறைவைத் தருகிற வேலை எவை; எந்த வேலையில் ஈடுபடும் போது உங்களுக்கு கொஞ்சமும் சலிப்பும், வெறுப்பும் இல்லாமல் நேரம் போவதுகூடத் தெரியாமல், முழு ஆர்வத்துடன் இருக்கிறோம் என்பதை ஆராய்ந்து, அது தர்ம நியாயத்திற்கு உட்பட்டதாகவும், சமுதாய வளர்ச்சிக்கு உதவக்கூடியதாகவும் இருக்கும் பட்சத்தில், உங்கள் பொருள் ஈட்டும் வேலை நேரம் போக மீதி நேரத்தை உங்களின் மனதிற்குப் பிடித்த வேலைகளைச் செய்யும் போது ஒரு மன நிறைவும், ஒரு திருப்தி உணர்வும் ஏற்படும். அந்த வேலையில் பெரிய லாபம் வரவேண்டும் என்று கூட இல்லை. எதோ ஒரு வகையில் உங்கள் மனதிற்கு நிறைவைத் தருகிற வேலையாக இருந்தால் போதும்.

உதாரணமாக ஒரு சிலர் எந்த விதமான எதிர்பார்ப்பும் இன்றி தனது மன விருப்பத்திற்காக மரம் நடுவது, இசைப் பயிற்சி மேற்கொள்வது, பாடல் பாடுவது, கேட்பது, ஓவியம் வரைவது, வீட்டில் தோட்டம் அமைப்பது, நல்ல சமையல் செய்யக் கற்றுக்கொள்வது, மற்றவர்கள் தங்களின் கஷ்டங்களைக் கூறும்போது காது கொடுத்துக் கேட்பது, தனக்கு நன்கு தெரிந்த நல்ல விசயங்களை மற்றவர்களுக்கு எடுத்துகூறுவது, நமது பகுதியில் உள்ள பொதுவான பிரச்சனைகளை மக்களுடன் ஒன்றுகூடி தீர்வு செய்வது என நமக்கு பிடித்த நல்ல வேலைகளில் ஈடுபடுவதால் மனம் நிறைவடையும்.

இப்படி நாமாகவே நமது தினசரி வழக்கமான வேலைகளோடு, நமக்குப் பிடித்த வேலைகளையும் சேர்த்துக் கொண்டு சிறப்பாகச் செயல்படும்போது மட்டுமே புற வாழ்க்கையில் இருந்து வந்த பற்று குறைவதை மாற்றி அமைக்கமுடியும்.

நாம் இந்தப் புரிதலுக்கு வரும் முன்பு மனப்போராட்டத்துடனும் எதிர்கால பயத்துடனும் மட்டுமே எப்போதும் இருந்து வந்தோம். ஆனால் புரிதலுக்குப் பிறகு மனப்போராட்டத்தை எதிர்த்து நாம் எதுவும் செய்வதில்லை. மேலும் கடந்தகாலம், எதிர்காலம் என்பது எப்போதும் நமக்கு இருப்பது இல்லை. அவைகள் மாயை என்பது நமக்குத் தெரிவதால் நம் கைவசம் இருக்கும் நிகழ்காலத்தை, நம்மால் எந்த அளவிற்கு சிறப்பாகப் பயன்படுத்திச் செயல்பட முடியுமோ அந்த அளவிற்கு சிறப்பாக செயல்படுவது மட்டுமே நமக்கு இங்கு இருக்கும் மிக பெரிய வாய்ப்பு ஆகும். நமது கையில் இருக்கும் நிகழ்காலத்தைக் கருத்தில் கொண்டு நாம் நமது இலக்கை அடைவோமாக.

"மனதின் அக இயக்கத்தைப் புரிந்து கொண்ட பிறகு
நம் கைவசம் இருப்பது செயல்! செயல்!! செயல் மட்டுமே!!"

V.A.P. சரவணன், சேலம்
செல் : 99942-05880

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

நமது பகவத் பாதையில் பயணிக்கும் உங்கள் அனைவருக்கும் இனிய புத்தாண்டு மற்றும் பொங்கல் நல்வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

உண்மையைப் புரிந்து கொண்ட நமக்கு ஒவ்வொரு நாளும் புதிய நாள்தான். அதுமட்டுமல்ல ஒவ்வொரு கணமும் புதிய கணமே!

பழையன கழிதலும் புதியன புகுதலும் நிகழ்ந்த வண்ணம் உள்ளது.

கணந்தோறும் தோன்றும் உணர்வும் அனுபவமும் புதிது புதிதே...

உண்மை புரியாத பலர் இறந்தகால நினைவுகளோடு போராடிக்கொண்டும் எதிர்காலக் கனவுகளை எதிர்பார்த்துக்கொண்டும் நிதர்சனமான நிகழ்காலத்தைத் தவறவிட்டு விடுகின்றனர்.

நினைவுகளோடும், கனவுகளோடும் வாழ்வதென்பதுதான் மாயையான வாழ்க்கை.

ஞானத்தெளிவு அடைந்தவர்களே கணத்துக்குக் கணம் வாழ்பவர்கள். இவர்கள் கணத்துக்குக் கணம் வாழவேண்டும் என்று வாழ்வதில்லை.. நினைவுகளோடும் கனவுகளோடும் போராட்டமும் எதிர்பார்ப்பும் இல்லாமல் சும்மா இருக்கிறார்கள்.

நிகழ்காலத்தில் வாழவேண்டும் என்ற முயற்சிகூட ஓர் எதிர்பார்ப்பாக மாறி நிகழ்காலத்தையும் எதிர்காலத்திற்குக் கொண்டு சென்று விடுகிறது. நாம் இருப்பதே நிகழ்காலம் தான்.

உண்மையில் இறந்தகாலம் என்றும் எதிர்காலம் என்றும் ஒன்று கிடையவே கிடையாது. அது வெறும் கற்பனை.

எப்பொழுதும் இருப்பது நிகழ்காலம் மட்டும்.

இது கணத்துக்குக் கணம் புதியதே.

இந்தப் புரிதலோடு இருப்பதே அகப்போராட்டமில்லாத வாழ்வாகும்.

உண்மையைப் புரிந்துகொண்டவர்களுக்கு எல்லா நாளும் புதிய நாளே!

நமது ஐயா வழங்கிய ஞானப்புரிதலால் ஏற்பட்ட தெளிவுகளில் இதுவும் ஒன்று.

சென்ற இரண்டு ஆண்டுகளாக ஐயாவின் ஞானக் கருத்துக்கள் அடங்கிய மாதக் காலாண்டரை பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் இலவசமாக வழங்கி வந்தோம்.

அது அனைவருக்கும் பயனுள்ளதாக அமைந்திருந்தது. அதனால் பல அன்பர்கள் நம்மோடு தொடர்புகொண்டு இவ்வாண்டுக்கான காலாண்டர் எப்போது கிடைக்கும் என கேட்டவண்ணம் இருக்கிறார்கள். ஆனால் இவ்வாண்டு அதற்கான பண ஒதுக்கீடு செய்யமுடியாத சூழ்நிலையால் காலாண்டர் கொடுக்க இயலவில்லை என்பதை தெரிவித்துக்கொள்கிறோம். எனவே அடுத்தாண்டு காலாண்டர் கொடுப்பதற்கான முயற்சியை மேற்கொள்வோமாக.

அன்புடன்,

K.S. ஜீவமணி, ஆசிரியர்,
செல் : 97891-65555

## ஸ்ரீ பகவத் ஐயாவுடன் மூன்று நாள் ஞான முகாம்

இடம் : பாலாஜி அரங்கம், ரெட்டியார் மில் ஸ்டாப், விழுப்புரம்
நாள் : 14-02-2014 மாலை 5-00 மணி முதல் 16-02-2014 மதியம் 3-00 மணி வரை
(உணவு, தங்குமிடம் மற்றும் செலவினங்கள் பகிர்வு தலா ரூ.500 மட்டும்)
குறைந்த எண்ணிக்கையில் மட்டும் பங்கு பெறுபவர்கள் சேர்க்கப்படுவதால் முன்பதிவு அவசியம்
முன்பதிவுக்கு : பேராசிரியர் திரு. இரவிச்சந்திரன், செல் : 94437-29525
அனைவரும் வருக..... பயன் பெறுக........

## ஸ்ரீ பகவத் ஐயாவுடன் ஒரு நாள் ஞான முகாம்

இடம் : ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம், 23/10, பழைய பரோடா வங்கி தெரு, செக்ரிட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை-53.
நாள் : 23-03-2014 காலை 10-30 மணி முதல் மாலை 7-30 வரை
(மதிய உணவு மற்றும் தேனீர் உட்பட நன்கொடை கட்டணம் ரூ.200 மட்டும்) முன்பதிவு அவசியம்
முன்பதிவிற்கு : திரு. சுகுமார் சீனிவாசன் செல் : 9952071525, 9884097438

## திருவண்ணாமலையில் ஐயாவின் ஆன்ம ஞான சத்சங்கம்

நாள் : 19-01-2014 முதல் 14-03-2014 வரை (பிப்ரவரி 14, 15, 16 தவிர)
நேரம் : தினமும் காலை 10-00 மணிமுதல் 12-30 மணிவரை
இடம் : ஸ்ரீ பகவத், 23/133, ரிப்போர்ட்டர்ஸ் காலனி, காஞ்சி சங்கர மடம் அருகில், சிங்க தீர்த்தம் எதிர்சாலையில், செங்கம் ரோடு, திருவண்ணாமலை.
(இரமண ஆஸ்ரமத்திலிருந்து செங்கம் ரோட்டில் 1 கி.மீ. தொலைவில் சிங்க தீர்த்தம் எதிர்சாலையில் பராசக்தி கோயில் எதிர்ப்புறம் காஞ்சி சங்கரமடம் அருகில்)
அனுமதி இலவசம் - தொடர்புக்கு : 9944215677

## ஐயாவுடைய நிகழ்ச்சி நிரல்

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 16-3-2014 | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர், சென்னை. | **"தன்னை அறியும் ஞானம்"** மாலை 5-30 to 7-30 மணி வரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர். செல் : 98840-97438, 99520-71525 |

## ஜென் கதை
## நிகழ்காலம்

ஒரு கிராமத்தில் ஞான வேட்கைகொண்ட ஓர் இளைஞன் இருந்தான். அவன் வசிக்கும் கிராமத்தில் இருந்து வெகு தொலைவில் அடர்ந்த மரங்களும் பயங்கரமான பள்ளத்தாக்குகளும் கொண்ட மலையின் உச்சியில் ஞானி ஒருவர் வசித்து வருவதாகக் கேள்விப்பட்டான்.

ஒருநாள் அவரை சந்தித்து ஞான உபதேசம் பெற வேண்டும் என்ற ஆர்வத்தில் புறப்பட்டான். தன் வீட்டில் இருந்து புறப்பட்டு மலை அடிவாரம் வரை செல்வதற்குள் மாலை மங்கி இருட்டத்தொடங்கிவிட்டது. இனி இருட்டில் இந்த ஆபத்தான மலையில் ஏறமுடியாது என்று வீடு திரும்பிவிட்டான்.

அடுத்தமுறை ஒருநாள் விடியற்காலையிலேயே வீட்டிலிருந்து ஞானியை சந்திக்க அந்த மலையை நோக்கி கிளம்பினான். இந்த முறை எப்படியும் ஞானியை சந்தித்துவிடவேண்டும் என்று விளக்கு ஒன்றையும் உதவிக்கு எடுத்துச் சென்றான்.

மலை அடிவாரம் சென்றடைவதற்குள் மாலையாகிவிட்டது. பிறகு மலை ஏறத்தொடங்கி சிறிது உயரம் ஏறியவுடன் இருட்டத் தொடங்கிவிட்டது. விளக்கை எற்றி நடக்கத் தொடங்கினான். கொஞ்ச நேரத்திலேயே கும் இருட்டாகிவிட்டது. இவன் இதுவரை தான் மலை ஏறிய இடத்திலிருந்து மலையின் அடிவாரத்தையும் மலை உச்சியையும் பார்த்தான். எல்லாப்பக்கமும் எதுவும் தெரியாத அளவுக்கு முழுவதுமாக இருட்டிவிட்டது.

இந்த மலையின் ஆபத்தான பள்ளத்தாக்கைப்பற்றியும், செங்குத்தான உயரத்தைப் பற்றியும் இவன் ஏற்கனவே நிறைய கேள்விப்பட்டிருக்கிறான். எனவே இந்த சிறு விளக்கை வைத்து இந்த ஆபத்தான மலையை ஏறுவது கடினம் என பயந்தான்.

மேற்கொண்டு என்ன செய்வது எனத் தெரியாமல் திகைத்துக் கொண்டிருந்தான். அச்சமயத்தில் சற்று தொலைவில் இருந்து சிறு விளக்கு வெளிச்சம் ஒன்று வந்துகொண்டிருந்தது. விளக்குடன் யாரோ வருகிறார்கள் எனப் புரிந்துகொண்டு அந்த வெளிச்சத்தை நோக்கி மெதுவாக நகர்ந்தான். அருகில் சென்று பார்த்தபோது முதியவர் ஒருவர் ஒரு லாந்தர் விளக்குடன் எந்த தடுமாற்றமும் இன்றி தைரியமாக மலையில் ஏறிக்கொண்டிருப்பது தெரிந்தது.

## ஜென் கதை 'நிகழ்காலம்'

அந்த முதியவர் அந்த சிறு லாந்தர் விளக்குடன் எந்த தடுமாற்றமுமின்றி தைரியமாக இந்த ஆபத்தான மலையில் ஏறிக்கொண்டிருப்பது இவனுக்கு ஆச்சரியத்தை தந்தது. அவரிடம் தன் சந்தேகத்தைக் கேட்டான்.

"பெரியவரே! மிக ஆபத்தான பள்ளத்தாக்குகளைக் கொண்ட இந்த மலையை, இந்த அதிபயங்கர இருட்டில் இச்சிறு விளக்கை வைத்துக்கொண்டு எப்படி இவ்வளவு தைரியமாக ஏறுகிறீர்கள்?"

"கையில் தான் விளக்கு இருக்கிறதே. காலுக்கடியில்தான் வெளிச்சமும் இருக்கிறதே. எதற்கு பயப்படவேண்டும்?" என்றார் முதியவர்.

"இந்த வெளிச்சம் போதுமா? மேலே செங்குத்தான பாறைகளும் ஆபத்தான பள்ளத்தாக்குகளும் இருப்பதாக கேள்விப்பட்டிருக்கின்றேனே ஐயா, அதை எவ்வாறு கடப்பது?"

அந்த முதியவர் அவனைச் சற்று உற்றுநோக்கி புன்னகையுடன் கூற ஆரம்பித்தார்.

"எனக்கு இதுவரை ஏறிவந்த பாதையைப் பற்றி சிந்தனையும் இல்லை, இனி ஏறப்போகும் பாதையைப் பற்றி பயமும் இல்லை. ஏனெனில் நான் நடப்பதற்கு என் காலடியில் இருக்கும் இரண்டடி வெளிச்சம் போதுமானது. இந்த வெளிச்சம் எப்போதும் என் கூட வரும்" என்றார் அந்த முதியவர்.

இவனுக்கு முதியவர் மீது நம்பிக்கை ஏற்பட்டது.

"ஐயா நானும் உங்களுடன் இணைந்து மலை ஏறலாமா?" என்றான்.

"சரி, மலை உச்சிக்கு எதற்காக வருகிறாய்?" என்றார் முதியவர்.

"ஞானியை சந்தித்து ஞானத் தெளிவு பெறுவதற்காக" என்றான் இளைஞன்.

இருவரும் மலை உச்சியில் ஞானியின் இருப்பிடத்தை அதிகாலையில் அடைந்தனர்.

ஞானியை எதிர்பார்த்து அமர்ந்திருந்தான் இளைஞன்.

ஞானியின் இடத்தில் முதியவர் வந்து அமர்ந்தார். இவனுக்கு ஆச்சரியம், "நீங்கள்தான் அந்த ஞானியா?!!"

"ஆமாம்" என்றார் ஞானி.

"ஞானம் பெற்று நிறைவாக வாழ வழி சொல்லுங்கள்" என்றான்.

அதைத்தான் உனக்கு நேற்று வழித் தடத்திலேயே கூறிவிட்டேனே" என்றார் ஞானி.

"உனக்கு முன்னும் பின்னும் இருக்கும் இருளை கண்டு பயப்படவேண்டிய அவசியமில்லை. உனது காலடியில் இருக்கும் வெளிச்சத்தைப் பயன்படுத்தி பயணித்தால் போதும்" என்றார் ஞானி.

இதை அன்றாட வாழ்வோடு எப்படி ஒப்பிடுவது?" என்று கேட்டான் இளைஞன்.

"இறந்த காலம், எதிர்காலம் என்ற இல்லாத மாய இருட்டுகளை கண்டு பயப்படாதே. கையில் இருக்கும் நிகழ்கால வெளிச்சத்தில் நிறைவாக வாழ்ந்து வந்தால் போதும். இதுவே ஞானம்" என்றார் ஞானி.

புரிந்துகொண்ட இளைஞன் மனப்பாரமின்றி மலை இறங்கினான்.



*If undelivered please return to:*

Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.